ஸ்ரீ சிருங்கேரி
சங்கராசார்ய மஹாஸ்வாமிகளின்
அருளுரை

தொகுப்பு—22



# பரம் பொருளைப் பற்றிய விசாரணை




# ஸ்ரீ சிருங்கேரி சங்கராசார்ய
# மஹாஸ்வாமிகளின் அருளுரை



தொகுப்பு - 22

# பரம்பொருளைப் பற்றிய
# விசாரணை



வெளியிடுவோர் :

**ஸ்ரீ சாரதா ட்ரஸ்ட்**

பாரதி தெரு, சிருங்கேரி - 577 139.

[ விலை ரூ 1 – 50

Copies can be had from :
The Publication Manager,
Sri Sharada Trust,
(Madras Office)
Sri Sringeri Math Buildings,
No. 11, Venkatanarayana Road,
Madras - 600 017.

Phone : 442041



Printed at :
Mercury Printers,
82, Bazaar Road, Madras - 4. Phone : 74097

10-1



சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ மஹாஸன்னிதானம்

# மு ன் னு ரை

நம் குருநாதரான சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ மஹாஸன்னிதானம் 1977ம் ஆண்டு சென்னையில் யாத்திரை மேற்கொண்டிருந்தபோது ராஜா அண்ணாமலைபுரத்திலுள்ள 'சிருங்கேரி பிரவசன மந்திரத்தில்' பல அருளுரைகளை வழங்கினார். அவற்றில் ஓர் அருளுரையில் "பரம்பொருளை எவ்வாறு விசாரம் செய்வது ? அதன் லக்ஷணங்கள் என்ன ? ஜீவனது ஸ்வரூபம் என்ன ?" என்ற பொருள் குறித்து ப்ரஹ்ம ஸூத்ரத்திலுள்ள ஒரு ஸூத்ரத்தை விளக்குகிறார். அருளுரையை வரிவடிவில் ஆக்க செய்ய (பெங்களூர்) திருமதி ரங்கநாதனும், தொகுத்துத்தர திரு கோ. இராமசுப்ரமணியனும் உதவியுள்ளனர். ஸ்ரீசாரதாடிரஸ்ட் 'ஆசார்யாளின் அருளுரைத்' தொகுப்புகளில் 22வது புத்தகமாக இவ்வருளுரையை வெளியிட்டுள்ளது என்பது இத்தருணத்தில் குறிப்பிடத்தக்கது.

இப்படிக்கு,
இரா. மு. உமேஷ்,
ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு
சங்கராசார்ய மஹாஸ்வாமிகளின்
பத்திரிகைச் செயலாளர்.

பெங்களூர்,
22 – 1 – 84.

# பரம்பொருளைப் பற்றிய விசாரணை

வியாசர் தனது ப்ரஹ்ம சூத்திரத்தில் யாரெல்லாம் ப்ரஹ்ம விசாரம் செய்வதற்குத் தகுதியுள்ளவர்கள் என்று விளக்கமாக கூறினார். ப்ரஹ்ம விசாரம் செய்ய வேண்டுமென்றால் எவ்வாறு செய்வது ? ப்ரஹ்மத்தினுடைய லக்ஷணம் என்ன ? ஸ்வரூபம் என்ன என்பது பற்றியெல்லாம் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும். சங்கர பகவத்பாதாள் ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபம் என்ன என்பதைக் கேள்வி ஒன்றை முதலில் கேட்டு சூத்திரத்திற்கு விளக்கம் எழுதுகையில் அதற்குப் பதிலையும் அவரே கூறினார்.

ஜன்மாத்யஸ்ய யத :

(இதனுடைய ஜன்மம் முதலியவை எதிலிருந்தோ)

என்று ஒரு சூத்திரம் உள்ளது.

ப்ருஹ்மத்தைப் பற்றி முழுவதுமாகத் தெரிந்துவிட்டால் நாம் ப்ரஹ்ம விசாரம் செய்ய வேண்டியதற்கு அவசியமே இருக்காது. ப்ரஹ்மத்தைப் பற்றி ஒன்றுமே நமக்குத் தெரியாது என்றாலும் நம்மால் விசாரம் செய்ய முடியாது.

ஆகவே நாம்

யஸ்மாத் ஜன்மஸ்திதிபங்க :

(எங்கிருந்து (உலகத்தின்) படைப்பும், காத்தலும்,
அழிவும்... . )

என்று கூறப்பட்ட வகையில் அந்த ப்ரஹ்மத்தைப் பற்றி உலகத்தின் படைத்தல், காத்தல், மற்றும் அழித்தல் ஆகியவை சைதன்யத்தினுல்தான் ஏற்படுகிறது என்று கூறி விசாரம் செய்யமுடியும். ப்ரஹ்மம் என்பது குணமும், வடிவமும் இல்லாதது. அதற்கு லக்ஷணங்களைச் சொல்லு கிறீர்களே என்று கேட்டால், லக்ஷணங்கள் இருவிதம் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இதற்கு உதாரணத்தைப் பார்ப்போம். தேவதத்தன் என்று ஒரு மனிதன் இருந்தான். அவனுடைய வீடு எங்கே இருக்கிறது என்று கேட்கையில் " அதோ, அந்த காக்கை உட்கார்ந்திருக் கிறதே அதுதான் தேவதத்தனுடைய வீடு " என்று ஒருவன் கூறினுன். அந்த மனிதன் அந்த வீட்டைப் போய்ப்பார்க் கையில் காகம் அங்கு இல்லை. ஆனுல் அது தேவதத்தனுடைய வீடா இல்லையா என்று கேட்டால் அது தேவதத்தனுடைய வீடுதான். இதுபோன்ற லக்ஷணம் கூறுவதற்கு 'தடஸ்த லக்ஷணம்' என்று சாஸ்த்திரத்தில் பெயர் சூட்டப்பட்டிருக் கிறது. நாம் புரிந்து கொள்ளும் வரை அந்த லக்ஷணம் இருக்கும். அதற்குத்தான் 'தடஸ்த லக்ஷணம்' என்று பெயர். ஆனுல் நாம் அந்த விஷயத்தைப் புரிந்து கொண்ட வுடன் அந்த லக்ஷணம் அங்கு இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. எவ்வாறு மேற்கூறிய உதாரணத்தில் வீடு கண்டுபிடிக்கப்பட்ட பின்பும் காகம் அங்கேயே இருக்க வேண்டு மென்பதில்லையோ அதேபோல்தான் மற்ற விஷயங்களிலும் தடஸ்த லக்ஷணம் இருக்கிறது.

ப்ரேச்யன் (வேலைக்காரன்) ஒருவனை நாம் வர்ணனை செய்யலாம். மற்ரெருவன் பார்க்கும் சமயத்திலும் அவன் அப்படியேதான் இருப்பான். " அவன் நேற்று பார்ப்பதற்கு கருப்பாக இருந்தான்; இன்று சிகப்பாக மாறிவிட்டான் " என்பதெல்லாம் கிடையாது. அதே போல் " நேற்று அவனுக்கு இரண்டு கண்கள் இருந்தன; இன்று பார்க்கும் போது ஒரே கண் ஆகிவிட்டது " என்றெல்லாம் கிடையாது.

இத்தகைய லக்ஷணங்கள் எப்போதும் இருப்பவை அவற்றிற்கு, ' ஸ்வரூப லக்ஷணம் ' என்று பெயர்.

இந்த இரண்டு லக்ஷணங்களும் ஒரு பொருளுடைய ஸ்வரூபத்தைத் தெரியப்படுத்துவதற்காகத்தான் இருக்கின்றன. ஆக வேதான் சாஸ்திரத்தில்,

" யஸ்மாத் விச்வமுதேதி யத்ர நிவஸதி அன்தே
தத்ப்யேதி "

(எங்கிருந்து அனைத்துலகமும் உண்டாகின்றதோ, எங்கு இருக்கின்றதோ, எங்கு லயமடைகின்றதோ)

என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்த உலகமெல்லாம் தோன்றி, அவை இருந்து, பிறகு அழிவடைவதற்குக் காரணமாக இருப்பது அந்த சைதன்யம் தான் என்று தெரிந்து கொள்ளவேண்டுமென்று அந்த மேற்கோளில் கூறப்பட்டிருக்கிறது. அதை மனதில் வைத்துக் கொண்டு எந்த ஈச்வரனுல் இந்த அனைத்து உலகமும் படைக்கப்பட்டு இருக்கிறதோ, எந்த ஈஸ்வரனுல் இந்த உலகமனைத்தும் காக்கப்பட்டு வருகின்றதோ, கடைசியாக யாரிடத்தில் இந்த அனைத்துலகமும் அடங்கிவிடுமோ அதை ப்ரஹ்மம் என்று தெரிந்து கொள்ள வேண்டும். இந்த மூன்றும் ஒரே இடத்தில்தான் இருக்கவேண்டும். இவ்வாறில்லாமல் வேறு வேறு பொருட்களில் இருந்தால் உலகத்தின் படைப்பிற்கு ஒன்று காரணம், அது காக்கப்படுவதற்கு வேருென்று காரணம் என்று இரண்டு மூன்று காரணங்களாகிப் பிறகு அத்வைத மதமே - அத்வைத தத்துவமே இல்லாமற் போய்விடும்.

ஆனால் நாம், ப்ருஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன் என்றெல்லாம் வேறு வேருகக் கூறுவோமே என்ருல், ஒரே சைதன்யம்

தான் இவ்வாறு பலவிதமான ரூபங்களைப் பெற்று வருகிறது. ஆகவே இவ்வாறு கூறுவதினால் நம்முடைய அத்வைதத்திற்கு எந்தவிதமான எதிர்ப்பும் இல்லை.

ப்ரஹ்மத்தினால்தான் உலகம் ஏற்படுகிறது என்ற லக்ஷணத்தைக் கூறுவதினால் என்ன ஏற்படுகிறது என்று கேட்டால், எவ்வாறு ஒரு வீட்டை நாம் அடையாளம் காண்பிக்கும்போது 'காக்கை இருக்கும் வீடு' என்று சொல்கிறோமோ அதேபோல் தான் இங்கும். அதனால்தான் நாம் இந்த உலகமனைத்தும் ப்ரஹ்மத்தில் கல்பிக்கப்பட்டுள்ளது என்று கூறுகிறோம். அதையே நாம் 'தடஸ்த லக்ஷணம்' என்று சொன்னோம். ஆராய்ந்து பார்த்தால் உலகத்தைப் பற்றிப் பேசும்பொழுது தான் உலகம் இருக்கிறது என்று நாம் கூறுவோம். ஆனால் ப்ரஹ்மஞானம் அடைந்து தன்னுடைய உண்மையான ஸ்வரூபம் எது என்று தெரிந்து கொண்டவர்களிடம் உலகம் என்பது அவசியமா என்று கேட்டால் அவர்களுடைய பார்வையில் உலகம் என்பதே கிடையாது.

ப்ரஹ்மத்தைப்பற்றி,

ஸத்யஞானஸுகஸ்வரூபம்

(நிலையானது - அறிவு வடிவமானது - இன்பவடிவமானது)

என்று கூறப்பட்டிருக்கிறது. இதுவே ப்ருஹ்மத்தின் ஸ்வரூப லக்ஷணம் எனப்படுகிறது. ஸ்வரூப லக்ஷணம் என்றால் என்ன ? குறிக்கப்படும் பொருளை அந்த ஸ்வரூப லக்ஷணம் என்பது ஒரு போதும் விடாது. ஸ்வரூப லக்ஷணம், பொருள் இருக்கும்வரை இருந்துக் கொண்டேதான் இருக்கும். ப்ரஹ்மத்தைக் குறிக்கும் போது ஸத்ய ஞான ஸுக ஸ்வரூபம் என்பது அதன் ஸ்வரூப லக்ஷணம் என்று கூறப்படும்.

உலகத்தில் எத்தனையோ வகையான ஸத்யங்கள் (உண்மைகள்) உண்டு. ஆனால் எல்லாவிதமான ஸத்யங்களுக்கும் மேலான ஒரு ஸத்யம் உண்டு. பரம்பொருள்தான் மிக உயர்ந்த ஸத்யம் எனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஒருவனுக்கு பத்து வயது என்று யாராவது சொன்னால் அவனைவிடப் பெரியவனாக இருக்கும் இருவது வயதுக்காரனை நாம் காட்டலாம். அதற்கும் மேலே பெரியவனாக இருக்கும் முப்பது வயதுக்காரனும் இருப்பான். ஆனால் ப்ரஹ்மா இருக்கிறாரே அவருடைய வயது என்ன என்பதை அவ்வளவு சீக்கிரமாகக் கூறமுடியாது. அதைப்போல இவ்வாறு நாம் வயதுகளைப் பிரித்துச் சொல்வதுபோல் ஸத்யத்திலும் தரங்கள் இருக்கின்றன. இந்தப் ப்ரஹ்மம் என்பது உத்தமமான ஸத்யம்.

" த்ரிகாலாபாத்யத்வம் ஸத்யத்வம் "

(முக்காலங்களிலும் அழியாமலிருப்பது ஸத்யம்)

எனச் சாஸ்திரம் கூறுகிறது.

ஒரு பொருள் முன்பு இருந்ததில்லை, என்ற வாக்கியத்திற்கும் இடமாகக்கூடாது, இப்போது இல்லை என்ற வாக்கியத்திற்கும் அது இடமாகக்கூடாது. இனி இருக்கப் போவதில்லை என்ற வாக்கியத்திற்கும் இடமாகக் கூடாது. உலகில் இது போன்ற தகுதிகளுள்ள பொருட்களை நாம் பார்க்க முடியாது. உலகத்தில் நாம் பார்த்த பொருட்கள் பல இப்போது நம்மிடம் இல்லை. ஆகவே முக்காலங்களிலும் இல்லை என்ற ஒரு வார்த்தைக்கு எத்தப் பொருள் இடமாகாதோ அந்தப் பொருள்தான் ஸத்யம் என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது சைதன்யம் ' முன்பு இருந்ததில்லை ' என்று கிடையாது. ' இப்போது இல்லை ' என்பதும் கிடையாது. நானை இருக்கப்போவதில்லை' என்றும் கிடையாது ஆகவே தான்

" த்ரிகாலாபாத்யத்வம் ஸத்யத்வம் "

என்று கூறப்பட்டுள்ளது. இன்னொரு பொருள் எதிர்பார்த்து இந்த லக்ஷணம் இல்லை.

" ஜகத்காரணம் ப்ரஹ்மா "

(உலகிற்குக் காரணம் பரம்பொருள்)

என்று கூறப்படுமிடத்தே உலகம் என்பதை அடிப்படையாக வைத்துத்தான் அந்த லக்ஷணம் சொல்லப்படுகிறது. உலகத்தை வைத்துக்கொண்டு நாம் ஒரு லக்ஷணத்தைச் சொன்னால் உலகம் இருக்கும் வரைதான் அந்த லக்ஷணத்தை சொல்லமுடியும். உலகம் இல்லாவிட்டால் ப்ரஹ்மம் உலகத்திற்குக் காரணம் என்று நாம் கூறமுடியாது. ஆகவே

" த்ரிகாலாபாத்யத்வம் "

என்பதை 'தடஸ்த லக்ஷணத்திற்கு' நாம் கூறமுடியாது. ஆனால் முக்காலங்களிலும் இருக்கப்பட்ட லக்ஷணம் ஸ்வரூப லக்ஷணம் ஆகும். ஆகவே எப்போதும் ப்ரஹ்மம் சாச்வதமாக இருக்கும் என்றுதான் பொருள். 'எப்பொழுதும்' என்ற வார்த்தையை காலவரைக்குட்பட்ட நமது பிறப்பை மனதில் வைத்துக் கொண்டு நாம் சாதாரணமாக உபயோகிப்போம். ஆனால் பரஹ்மம் எப்போது உண்டு என்ற இடத்தில் ப்ரஹ்மத்தின் இருப்பிற்குக் காலவரையறை கிடையாது என்று பொருள். அது இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் இருக்கப்பட்டது. ஒரு பொருள் இருந்தாலும் அது இருக்கிறது என்று ஒருவருக்கும் அறிவே இல்லாமல் இருந்தால், அப்போது பொருள் உண்டு என்று எவ்வாறு கூறமுடியும்? இந்த அனைத்து உலகமும்கூட எப்போது ப்ரஹமத்தினால் கல்பிதமாகி இருக்கிறதோ, அப்போது அந்த ப்ரஹ்மத்தினுடைய அறிவு படைப்பவனுக்காவது

இருக்கிறதா இல்லையா? சூர்யன் ஸவப்ரகாசமாய் (தானே ப்ரகாசிப்பவனாக) இருக்கிறான். சூரியனைப் பார்ப்பதற்கு நமக்கு வேறு எந்த தீபமும் வேண்டாம். அதே சமயம் வேறு ஏதாவது ஒரு பொருளைப் பார்க்க வேண்டுமென்றால் நாம் சூரியனுடைய உதவியை நாடுகிறோம். ஒருவனுக்குக் கண் இருந்தால் அவன் சூரியனைப் பார்க்கமுடியும். அந்த ஒன்றுதான் வேண்டும். அதேபோல் இந்த பரப்ரஹ்மம் என்பதுதானே பிரகாசிப்பது. இது பிரகாசம் கொடுப்பதாக இருப்பதால், இது அறிவு ஸ்வரூபமாகும். "நாம் இருந்தால் அதுவும் இருக்கும். அதைக் காணத் தனிப்பட்ட பொருள் ஒன்றும் வேண்டாம். ஆகவே அறிவு ஸ்வரூபமானது என்ற லக்ஷணம் ஸ்வரூப லக்ஷணம் ஆகும். தடஸ்தலக்ஷணம் இல்லை.

அடுத்ததாக 'ஸுகஸ்வரூபம்' என்பது கூறப்பட்டுள்ளது. நாம் உலகத்தில் எப்பொழுதும் சுகமாக இருக்க வேண்டும் என்றே ஆசைப்படுகிறோம்.

"ஏதஸ்யைவ ஆனந்தஸ்ய அன்யானி பூதானி
மாத்ராமுபஜீவந்தி"

(இந்த ஆனந்தத்தின் ஒரு துளியை வைத்துக்கொண்டு தான் மற்ற எல்லாப் பிராணிகளும் ஜீவிக்கின்றன)

என்றும்,

யஸ்மின் நித்யஸுகாம்புதௌ கலிததீ: ப்ரஹ்மைவ ந
ப்ரஹ்மவித்

(நிலையான இன்பக்கடலில் மனம் ஒன்றிப் போனவன் ப்ரஹ்மத்தை அறிந்தவன் மட்டுமல்ல; அவன் ப்ரஹ்மமே ஆகிவிடுவான்)

என்றும் கூறப்பட்டிருப்பதால்

ப்ரஹ்மம் என்பது அப்படிப்பட்ட ஒரு ஆனந்த ஸ்வரூப மாகும். ஆனந்த ஸ்வரூபத்திற்கு எப்பொழுதுமே அழிவு கிடை யாது. ஆகவே அதுவும்கூட ப்ரஹ்மத்தினுடைய லக்ஷணம் என்று கூறப்பட்டிருக்கிறது. மேற்கூறப்பட்ட மூன்று லக்ஷணங் களும் சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் சொல்லும் பொழுது இந்த மூன்றும் ஒன்றே ஒன்றாகத்தான் கூறுவர். தனித்தனியாகக் கூறமாட்டார்கள். ஆனால் ஸ்வரூபத்தை அறிந்து கொள்வதற்கு நாம் மூன்றையும் இவ்வளவு விளக்க மாகப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதனால்தான் ' ஸத்ய ஞான ஸுக ஸ்வரூபம் ' என்று கூறப்பட்டுள்ளது.

" அவதி த்வைதப்ரணாசோஜ்ஜிதம் "

(எல்லை, த்வைதம் மற்றும் அழிவு இல்லாதது)

உலகத்தில் நாம் காணும் ஒவ்வொரு பொருளுக்கும்கூட ஓர் அவதி (எல்லை) என்பது உண்டு. " ஒரு பொருள் இரண்டடி உண்டு ; நான்கு அடி உண்டு " என்றெல்லாம் நாம் கூறுவோம். காலத்தினால் ஓர் எல்லையைப் பரம் பொருளிற்கு விதிக்கமுடியாது என்பதை நாம் பார்த்தோம். தேசத்தினால் அதாவது இடத்தினாலும் கூட பரப்ரஹ்மத்திற்கு எந்த ஓர்அளவும் கிடையது ஏனென்றால் பரம்பொருளானது எல்லா இடத்திலும் வியாபித்திருக்கிறது. " ஒரு பொருள் இந்த இடத்தில் இருக்கிறது ; இன்னொரு இடத்தில் இல்லை " என்றால் அந்தப் பொருளிற்கு இடத்தினால் அளவு இருக்கிறது என்று நாம் கூறுவோம். ஆனால் பரம்பொருளிற்கு எந்தவித மான அளவும் கிடையாது.

பாதோஸ்ய விச்வா பூதானி । த்ரிபாதஸ்யாம்ருதம் திவி

( உலகம் யாவும் பரம்பொருளுடைய ஒரு பாகமே யாகும். பரம்பொருளுடைய முக்கால் பாகமானது அழிவற்றதாக - இருந்து ...)

என்று வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதாவது இந்த உலகத்தில் உள்ள அனைத்துமே ப்ரஹ்மத்தினுடைய ஒரு துளிதான் என்று நாம் அறிந்து கொள்ளவேண்டும். ஆகவே இடம், என்கிற கருத்துக்கூட நாம் உலகத்தை பார்க்கும் பொழுது தான் எற்படுகிறது. உலகம் இல்லாத சமயத்தில் அத்தகைய கருந்து இல்லை.

" ந தஸ்ய ப்ரதிமா஽ஸ்தி "

என்று கூறப்படுவது போல் இந்த ப்ரஹ்மத்திற்கு உவமை என்பதே கூறமுடியாது" அது பெரிய பொருள் என்று நாம் கூறினால் " அது எவ்வளவு பெரிய பொருள்" என்று ஒருவன் கேட்க முடியாது. ஏனென்றால் அதை விடப் பெரிய பொருள் கிடையவே கிடையாது.

" அவதித்வைதப்ரஞ்சோஜ்ஜிதம் "

( எல்லை, த்வைதம் அழிவு இல்லாதது )

என்று அடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது. த்வைதம் என்றால் என்ன என்பதை இப்பொழுது பார்ப்போம். சாஸ்திரத்தில் ப்ரஹ்மம் மற்றொரு பொருளினால் அடக்கப்பட்டதல்ல என்று கூறப்பட்டுள்ளது. "இது ப்ரஹ்மா, இது ப்ரஹ்மா இல்லை" என்று நாம் எந்தப் பொருளையும் பார்த்துச் சொல்ல முடியாது. ப்ரஹ்மத்தின் ஸத்யம் தான் உலகத்திலே பெரிய ஸத்யம் என்று முன்பே கூறினோம். ஆகவே ப்ரஹ்ம ஸத்யத்தைத் தவிர வேறு எந்த ஸத்யமும் இல்லாதிருக்கப்பட்டபொழுது உலகத்தில் பரம்பொருளைத் தவிர வேறு எந்தப் பொருளை யும் காட்ட முடியாது. எந்தப் பொருளை நாம் பார்த் தாலும் கூட அதுவும் பரம்பொருள்தான். ஆகவே த்வைதம் ( இரண்டாவது பொருள் ) என்பதே கிடையாது. இரண்டாவது பொருள் என்பது தனியாக இருந்தால் அப்பொழுது த்வைதம் உண்டு. ஆனால் நாம் உலகத்தைப்

பார்க்கிறோமே (அது இரண்டாவது பொருளல்லவா ?) என்று யாராவது கேட்டால் அவர்களுக்கு நாம் ஒரு உதாரணத்தைக் கூறலாம்.

தங்கம் என்ற உலோகத்தை நாம் மோதிரவடிவில் ஆக்கினாலும் அப்போது தங்கம்தானே அந்த வடிவில் உள்ளது! அதாவது நம் எதிரில் தங்கமே மோதிரவடிவில் தோன்றிக் கொண்டிருக்கிறது. மோதிர விஷயமாகச் சொல்லப்பட்ட உதாரணத்தில் பரிமாணம் (அளவு) என்பதாவது உண்டு. ஆனால் ப்ரஹ்ம விஷயம் அப்படியல்ல. அளவு என்பதும் கிடையாது. இதை விவர்த்தம் (தோற்றம்) என்று கூறுவர். சில பொருட்கள் நம்முடைய கண்களுக்குப் படும். ஆனால் அந்தப் பொருட்கள் உண்மையில் இருப்பவை அல்ல. ஏதாவது மேகத்தை நாம் தூரத்திலிருந்து பார்த்தோமானால் அதைப் பார்க்கும் பொழுது நமது கண்களுக்கு மாடு ஒன்று இருப்பது போல் தோன்றலாம்.

மோஹம் என்கிற இருட்டினால் நம்முடைய கண்களுக்கு ஒரு பொருள் வேறு விதமாகத்தோன்றும். அப்போது சில பொருட்களைக் கண்டு நாம் பயப்படுவதும் உண்டு. ஆனால் அங்கே பொருள் என்பது உண்மையிலேயே இல்லை. ஆகவே அதைப்பார்த்துப் பயந்து ஓடிப்போக வேண்டிய தேவையே இல்லை. ஆனால் அத்தகைய அறிவு நமக்கு இல்லை. பௌத்த மதத்தினர், "அறிவு இருந்தால் போதுமே, பொருள் எதற்கு" என்று கேட்பர். பொருள் இல்லாமல் அறிவு இல்லை என்ற ஸித்தாந்தம் நம்முடைய சாஸ்த்திரங்களில் இருக்கிறது ஆனால் ஒரு கயிற்றைப் பார்த்து நாம் பாம்பு என்று ப்ரமிக்கிறோமே (தவறாக எண்ணுகிறோமே) என்றால் நம்மைப் பொருத்த வரை அறியாமையினால் பாம்பு அங்கிருக்கிறது. [அந்த தோற்றமான பாம்பும், (உண்மையில் உள்ள) கயிற்றையே அடிப்படையாக வைத்துள்ளது.] அறியாமையினால் தெரிகின்ற அந்தப் பாம்பு அறியாமை நீங்கியவுடன்

அகன்றுவிடும். எவ்வாறு நாம் தூரத்திலிருந்து மேகத்தைப் பார்க்கும் பொழுது மாடு இருப்பது போலத் தோன்றிப்பின் அருகில் வந்ததும் மறைந்து விட்டதோ அதேபோல்தான் அறியாமையினுல் ஏற்பட்ட பாம்பு விஷயமும்.

ஒருவனைப் பார்த்து அவனுடைய பையன் ' அப்பா ' என்று கூப்பிடுகிருன். அவனுடைய மாப்பிள்ளை, ' மாமஞர் ' என்று கூப்பிடுகிருன். ஆனுல் இருப்பவன் ஒரே ஒருவன்தான். அதே போல் ஒரே பொருள் பலவிதமாகத் தோன்றிக் கொண்டிருக் கிறது என்று நாம் கூறமுடியும். ப்ரஹ்மத்தைத் தவிர எந்த ஒரு பொருள் இருந்தாலும், ப்ரஹ்மம் மற்ருெரு பொருளுக்குக் கட்டுப்பட்டது என்று ஆகிவிடும். ஆனுல் நிலை அவ்வாறு இல்லை. ப்ரஹ்மத்தைத் தவிர எந்தப் பொருளும் கிடையாது. ஆகவே த்வைதம் என்பதே கிடையாது.

" ப்ரஞ்சோஜ்ஜிதம் "

என்று அடுத்துக் கூறப்பட்டுள்ளதை நோக்குவோம்.

ப்ரஹ்மத்திற்கு நாசம் என்பதும் கிடையாது. ஆகவே ப்ரஹ்மத்திற்குச் சொல்லப்பட்ட ஸ்வரூப லக்ஷணங்கள், எப்போதும் ப்ரஹ்மம் ஒரே போல்தான் இருக்கும் என்று காட்டிக் கொண்டிருக்கின்றன.

" ஈச்வரனும் இருக்கலாம்; ப்ரஹ்மாவும் இருக்கலாம். ஆனுல் ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபம் தெரித்து கொண்டு எங்களுக்கு என்ன ஆக வேண்டியிருக்கிறது ? எங்களுடைய ஸ்வரூபம் தானே எங்களுக்குத் தெரியவேண்டும். ஆகவே எங்களுடைய ஸ்வரூபம் என்ன ? " என்ற கேள்வி நமக்கு வரும்.

மனிதன் பலவிதமான வேஷங்களை அவ்வப்போது போட்டுக் கொண்டிருக்கிருன். ஒரு சமயத்தில் அவன் (விழிப்பு நிலையில்)

எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறான். மற்றொரு சமயத்தில் (கனவு நிலையில்) பலவிதமான கற்பனைகளை ஒருவன் செய்து கொண்டிருக்கிறான். இன்னொரு சமயத்தில் (ஆழ்ந்த உறக்க நிலையில்) அவன் பார்த்துக் கொண்டிருப்பதும் கிடையாது; கற்பனை செய்வதும் கிடையாது. அப்பொழுது நான் 'இருந்து கொண்டிருக்கிறேன்' என்பது மட்டும் தான் இருக்கும். ஆழ்ந்த உறக்கநிலை முடிந்தவுடன், 'நான் சுகமாகத் தூங்கினேன்' என்றுதான் ஒருவன் எண்ணுகிறான். முன்னால் அவ்வாறு அவன் சுகமாக இருந்திருந்தால்தான் அவன் அவ்வாறு இப்பொழுது கூற முடியும். முன்னால் ஒன்றுமில்லாததை இப்பொழுது அவன் புதிதாகக் கூற முடியாது. ஆகவே ஒருவன் விழிப்பு நிலையில் எவ்வளவோ பொருட்களையெல்லாம் பார்த்து அவைகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறான். கனவு நிலையில் அதேபோல பல பொருட்களைக் கற்பனை செய்து கொண்டு இருக்கிறான். ஆழ்ந்த உறக்க நிலையையும் நன்றாக அனுபவிக்கிறான். ஒருவனுக்கு அவனைப்பற்றிய அறிவு அப்பொழுதெல்லாம் இருக்கிறதா என்று நாம் இப்போது பார்ப்போம். விழிப்பு நிலையில் இருக்கும் பொழுது 'நீ இருக்கிறாயா' என்று யாராவது ஒருவனை நாம் கேட்டால், 'நான் இருக்கிறேன்' என்று தான் அவன் சொல்லுவான். 'நான் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்; ஆகவே நான் இருக்கிறேன்' என்று ஒருவன் கூறுவான். கனவிலும் அவ்வாறுதான். 'நான் பலவிதமான பொருட்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்பதால் நான் அப்போதும் இருக்கிறேன்' என்று தான் ஒருவன் கூறுவான். தூங்கும் காலத்தில்கூட "நான் சுகமாகத் தூங்கிக் கொண்டிருக்கிறேன்" என்று ஒருவனுக்கு அப்பொழுதும் தெரியாமல் இருந்தாலும்கூட, தூக்கம் முடிந்து எழுந்த பிறகு "நான் சுகமாகத் தூங்கினேன்" என்ற அறிவு ஒருவனுக்கு இருக்கும். அவ்வாறு தூங்கும் சமயத்தில் அனுபவிப்பவன் என்பவன் ஒருவன் இல்லாமல் இருந்து, அனுபவத்தையும் அவன் அனுபவிக்காமல் இருந்தால், சுகமாக உறங்கியதைப் பற்றி விழிப்பு நிலையின்போது அவன் கூறமுடியாது.

ஆகவே 'ஸுஷுப்தி' நிலையிலும் கூட அனுபவம் என்பது உண்டு ஆனால் அஞ்ஞானம் (அறியாமை) மிகவும் தீவிரமாக இருப்பதினால் 'நான் இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்' என்பது ஒருவனுக்கு உறக்கத்தின் போது தெரிவதில்லை.

ஆகவே ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்திகளை அனுபவித்துக் கொண்டிருப்பதே ஜீவனுடைய ஸ்வரூபம். அப்பொழுது ஜீவ்ன் என்பவன் யார்? இவன் தனியாக இருந்தால் அப்-பொழுது ஏதாவது கடவுளை உபாஸனை செய்தால் அவனுக்கு ஸ்வர்கமோ, நரகமோ, சுகமோ, துக்கமோ ஏதாவது கிடைக்க ஏதுவாகும். ஆனால் இவன் (ஜீவன்)

''யஜ்ஜாக்ரத்ஸ்வப்னப்ரஸுப்திஷு விபாத்யேகம்
விசோகம் பரம்''

(எது விழிப்பு, கனவு மற்றும் ஆழ்ந்த உறக்க நிலைகளில், தனிப்பட்டதாயும், கவலையற்றதாயும் உயர்ந்ததாயும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறதோ) என்று கூறப்பட்டிருப்பதுபோல் துன்பமற்றவனாக இருக்கிறான். ஏன் அவ்வாறு என்று கேட்டால், ஜீவனுடைய உண்மையான ஸ்வரூபம் விழிப்பு நிலையா, கனவு நிலையா, ஆழ்ந்த உறக்க நிலையா என்று பார்க்க வேண்டும்.

ப்ரஹ்மத்திற்கு நாம் ''ஸத்ய ஞான ஸுக ஸ்வரூபம்'' என்று சொன்னோம். அவன் எப்பொழுதுமே ஸத்யம்தான்; எப்பொழுதும் சுகம்தான் ; எப்பொழுதும் அறிவுடையவனாகவே இருக்கிறான். ஆகவே எப்பொழுதுமே ப்ரஹ்மத்திற்கு விழிப்பு நிலை இருந்து விட்டால் இவனுடைய லக்ஷணமே விழிப்புநிலை தான் என்று நாம் கூறும்படி ஆகிவிடும். அப்போது இவனுக்கு எப்பொழுதும் ஸ்வப்னமோ, ஸுஷுப்தியோ கிடையாது என்றே கூறவேண்டிவரும்.

2

ஆனல் ஜாக்ரத் ஸ்வப்னம், ஸுஷுப்தி போன்ற நிலைகள் ஜீவனுக்கு வந்து போய்க் கொண்டிருக்கின்றன. ஆகவே எவை வந்து வந்து போய்க் கொண்டிருக்கின்றனவோ, அவற்றுள் ஒன்றையும் நாம் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் என்று கூற முடியாது. இந்த நிலைகளுக்கு ஜீவன் சாட்சியாக விளங்கிக் கொண்டிருக்கிருன். வந்து வந்து போய்க் கொண்டிருப்பவை எல்லாமும் பொய்தான். சாட்சியாக விளங்கிக் கொண்டிருக்கும் ஜீவனுடைய ஸ்வரூபம், துக்க ஸ்வரூபமா, (துன்பமயமா) ஸுக ஸ்வரூபமா (இன்பமயமா)' என்று கேட்டால், 'துக்க ஸ்வரூபம்' என்று நம்மால் கூறமுடியாது. இவனுக்கு துக்கம் என்பது எப்போது வருகிறது? வெளிப் பொருட்களுடன் ஜீவன் தொடர்பு வைத்துக் கொள்ளும்போதுதான் துக்கம் வருகிறது. வெளிப் பொருட்களுடன் இவன் சம்பந்தம் வைத்துக் கொள்ளாதபோது இவனுக்குத் துக்கம் என்பது வருவதே கிடையாது. ஆகவே துக்கம் என்பது எப்போதும் இருக்கும் என்று கூற முடியாது.

அடுத்தது ஜீவன் சுக ஸ்வரூபமா என்று பார்ப்போம். பாயசம் சாப்பிட்டால் ஒருவனுக்கு சுகம் கிடைக்கிறது அல்லது வேறு ஒரு பொருளைச் சாப்பிட்டால் ஒருவனுக்கு சுகம் கிடைக்கலாம். ஆகவே சுகமும்கூட ஒருவனுக்கு விஷயங்களினுல் ஏற்படுகின்றது என்று இதுவரை அறிந்து கொண்டோம். இனிமேல் சுகம் என்பது ஒருவனுக்கு விஷயங்கள் இருந்தால்தான் வருமா, அவை இல்லாவிட்டாலும் தானுகவே இருக்குமா என்பதைப் பற்றி நாம் விசாரம் செய்ய வேண்டும். பாயசம் சாப்பிடும்பொழுது ஒருவனுக்கு சுகம் வருகிறது என்று பார்த்தோம். ஆனல் ஒருவன் தூங்குகிருனே, அப்போது அவனுக்கு சுகம் இருந்ததா என்று பார்க்க வேண்டும். அப்போது சுகம் உண்டா, இல்லையா என்ருல்,

"நிர்விஷய: ய: அனுபவ: ச்ரூயதே ஸுகஸ்ய"

(விஷயமில்லாத சுகத்தின் அனுபவம் எது இருக்கிறதோ)

என்று கூறப்பட்டதுபோல், ஸுஷுப்தியின்போது எந்த ஒரு விஷயத்தின் தொடர்பினாலும் நமக்கு சுகம் வர வில்லையென்பது திண்ணம். வெளிவிஷயங்களே இல்லாத சமயத்தில் ஒருவனுக்கு சுகம் வந்தது என்றால், அப் பொழுது அவனுடைய ஸ்வரூபம் மட்டும்தான் இருந்தது என்று தான் பொருள். தங்கத்தில் பல உலோகங்-களெல்லாம் கலந்திருக்கும். தங்கத்தை உருக்கி விட்டு, அவை களையெல்லாம் தனியே பிரித்து வைத்து விட்டால், அப்பொழுது சுத்தமான தங்கம் தானே இருக்கும்? சுத்தமான தங்கத்தினு டைய ஸ்வரூபம் நமக்கு மற்ற உலோகங்களையெல்லாம் எடுத்து விட்டால்தான் தெரியும். அதேபோல் ஸுஷுப்தி சமயத்தில் (விஷயங்கள் இல்லாதபோது) ஜீவனின் ஸ்வரூபம் ஆனந்தம் என்பதை ஒருவன் புரிந்து கொள்ள வேண்டும். அதை நாமே புரிந்து கொண்டால் அதற்கு ஏன் சாஸ்திரம் அவசியம்? அஞ்-ஞானத்தைப் போக்க சாஸ்திரம் என்பது அவசியமாக இருக் கிறது. எந்த ஒரு அஞ்ஞானத்தினால் (அறியாமையால்) ஜாக் ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளையும் (நிலைகளையும்) நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோமோ, அத்-தகைய அஞ்ஞானத்தைப் போக்கிக் கொள்வதற்காகத்தான் நாம் சாஸ்திரம் வாசிக்க வேண்டும். நம்முடைய ஸ்வரூபத்தைப் பற்றிய அறிவு நமக்கு இல்லவே இல்லை என்பது கிடையாது. ஆனால் நம்மைப்பற்றிய அறிவு நமக்கு எப்போது உண்டு என்று கேட்டால், இந்த அஞ்ஞானம் கலந்திருக்கப்பட்ட தசைகளிலும் (காலங்களிலும்) இருக்கத்தான் செய்கிறது இந்த ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி இவையனைத்தும் ஒருவனுக்கு எதனால் வந்தது?

"துக்க ஜன்மப்ரவ்ருத்திதோஷமித்யாஞானானாம்

ததுத்தரோத்தராபாயே ததனந்தராபாயாதபவர்க:"

என்று ந்யாயஸூத்ரத்தில் வருகிறது.

துக்கம் என்பது எதனால் வந்தது ? சரீரம் வந்திருப்பதால் தான் துக்கம் வந்தது. சரீரமே இல்லாவிட்டால் துக்கமே கிடையாது. ஏனென்றால் ஆத்மா என்பவன் நித்யன். (நிலையானவன்) அவனுக்கு வெளிப்பொருட்களினால் ஏற்படக்கூடிய சம்பந்தமே கிடையாது. விஷயங்களினால் ஏற்படக் கூடிய சம்பந்தம், இந்த உடல் இருந்தால்தான் வரும்.

ஜ ்மம் எதனால் வந்தது என்று கேட்டால், பஞ்சதசீயில்

''குர்வதே கர்ம போகாய கர்ம கர்தும் ச புஞ்ஜதே''

(போகத்திற்காகக் கர்மாவைச் செய்கிறார்கள்; கர்மாவிற்காக போகத்தையனுபவிக்கிறார்கள்)

என்று கூறப்பட்டது போல்தான். நாம் செய்யும் செய்கைகளுக்குத் தகுந்தாற்போல்தான் நமக்கு ஜன்மா கிடைக்கிறது.

ஆகவே ஜன்மா என்பது கர்மாவினால் வந்திருக்கிறது. இந்தக் கர்மம் எதனால் வந்தது என்பதற்கு, "தோஷத்தினால்" என்று சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. தோஷம் என்றால் என்ன ?

' ராகத்வேஷ மோஹா தோஷா : '

என்று சொல்லப்பட்டுள்ளது. ராகம், த்வேஷம், மோஹம் என்ற மூன்றும் தோஷங்கள். சில பொருட்களைப் பார்த்தால் நமக்கு வெறுப்பு ஏற்படுகிறது. உதாரணத்திற்குப் பாம்பை பார்த்தால் நமக்கு விசேஷமாக வெறுப்பு ஏற்படுகிறது. நாம் வீட்டில் வளர்த்திருக்கக் கூடிய ஒரு சிறு நாய்க்குட்டியைப் பார்த்தால் நமக்கு மனதில் சந்தோஷம் ஏற்படுகிறது. ஏனென்றால் அந்த நாய் கடிக்காது ; பாம்பு கடிக்கும் என்ற பயம். ஆகவே ஒரு பொருள் நமக்கு வேண்டியிருக்கிறது; மற்றொரு

பொருள் வேண்டாம் என்றிருக்கிரேம். இவ்வாருன ராகமும், த்வேஷமும் (விருப்பும், வெறுப்பும்) மனிதனுக்கு உண்டு இந்த ராகத்வேஷம் எதனுல் ஏற்படுகிறது என்று கேட்டால், மோஹத் தினுல் ஏற்படுகிறது என்பதே அதற்குப் பதில்.

மோஹும் என்ருல் என்ன ? நிலையில்லாமல் இருக்கக்கூடிய ஒரு பொருளை, நிலைபெற்றது என்று கருதுவது மோஹும் எனப்படும். அதேபோல் அசுசியாக (தூய்மையற்று) இருக்கக் கூடிய ஒரு பொருளை தூய்மையானது என்று நினைப்பதும் மோஹம்தான். அதேபோல் அசுகமாக (இன்பம் தராமல்) இருக்கப்பட்ட பொருளை இன்பம் என்று நினைப்பதும் மோஹத் தில் சேரும். உதாரணத்திற்கு நாம் இந்த உடலை நித்யம் என்று நினைக்கிருேமோ இல்லையோ, நித்யம் ஆக்கிக் கொண்டு விடவேண்டுமென்று நினைக்கிரேம்

" புக்தா பஹுவோ தாரா
லப்தா : புத்ராச்ச பௌத்ராச்ச | "

என்று இவ்வாறு வரும் ஒரு சுலோகத்தில் நீலகண்ட தீக்ஷிதர், "ஒருவன் பல கல்யாணங்கள் செய்து கொண்டு விட்டான். பல பிள்ளைகளையும், பேரன்களையும் பெற்ருகிவிட்டது. நூறு ஆண்டுகளும் வாழ்ந்தாகிவிட்டது. அப்போது யமன், "வா" என்று அழைத்தாலும் அவன் தயாராகவா இருக்கிருன் ?" என்று கூறியுள்ளார்

ஆகவே மனிதன் தன் சரீரத்தையே " நான் " என்று நினைத்துவிடுகிருன். நாம் ஸ்திரமாக (எப்பொழுதும்) இருக்க வேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு இருக்கிறது. இந்த எண்ணம் நியாயம்தான். ஆனுல் இந்த ' நான் ' என்பதை அவன் எங்கு நினைக்கிருன் என்பதில்தான் விஷயமே இருக் கிறது. நிலையற்ற ஒரு பொருளை ' நான் ' என்று நினைத்துக் கொண்டு, அந்த ' நான் ' நிலையாக இருக்கவேண்டுமென்று

நினைத்தால், அதை விடப் பைத்தியக்காரத்தனம் வேறு ஏதாவது இருக்க முடியுமா? ஆகவே மனிதன் அநித்யமாக இருக்கப்பட்ட ஒரு பொருளை நித்யமாக நினைக்கிறான். அடுத்ததாக அசுசியாக இருக்கப்பட்ட பொருளை சுசியாக இருக்கவேண்டுமென்று நினைத்துக் கொள்கிறான். "நான் மிகவும் சிவப்பாக இருக்கிறேன்; மன்மதன் போல் இருக்கிறேன்" என்று ஒருவன் நினைத்துக் கொள்கிறான். ஒரு சிறிய ஊசியினால் அவன் உடலில் ஒரு சிறிய துளை போட்டாலும் அதிலிருந்து உடனே பார்க்கச் சகிக்கமுடியாத இரத்தம்தான் வரும். நான்கு நாட்கள் அப்படியே விட்டு விட்டால் அதிலிருந்து சீழ்வர ஆரம்பிக்கும். ஆகவே இந்த உடல் என்பது மிகவும் தூய்மையற்ற ஒன்றாகும். பின் எதற்காக இந்தத் தூய்மையற்ற உடல் நமக்கு வேண்டும்?

நாம் ஒரு ஆற்றைக்கடக்க ஒரு தோணியை உபயோகப் படுத்துவோம். ஆற்றைச் கடப்பதற்கு அந்தத் தோணி தகுந்ததா என்று தான் நாம் பார்ப்போமே தவிர, அந்தத் தோணியின் நீளம், அதனுடைய நிறம், அதனுடைய அகலம் போன்றவற்றையெல்லாம் நாம் பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம். பகவான் (பிறப்பு - இறப்பு என்னும்) ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்குச் சக்தியை இந்த உடம்பிற்கு கொடுத்திருக்கிறார். ஆகவே இப்பொழுதே இதை வைத்துக் கொண்டு ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்கு முயற்சி செய்ய வேண்டுமே தவிர, "நான் இன்னும் வெள்ளையாக வேண்டும், உடல் சிவப்பாவதற்கு ஏதேதோ பொடிகளையெல்லாம் பூசிக் கொண்டு அதைச் சிவப்பாக்க வேண்டும்" என்றெல்லாம் ஒருவன் நினைக்கக்கூடாது. உடல் சிவப்பானால் என்ன? கருப்பானால் என்ன? அதனால் எந்த விதமான பிரயோசனமும் கிடையாது. ஆகவே தூய்மையற்று இருக்கப்பட்ட இந்த உடலை தூய்மையாக்க வேண்டும் என்று ஒருவன் நினைத்துக் கொண்டிருக்கிறான். இதைத் தூய்மை ஆக்கவே முடியாது. "அசுசியாய் இருந்தால் என்ன, சுசியாக இருந்தால் என்ன" என்று நாம்

கூறுவதானால் ஒருவன் " நான் ஏன் ஸ்நானம் (குளியல்) செய்ய வேண்டும்?" என்று கேட்கக் கூடாது. எதுவரை ஒருவனுக்கு இந்த சரீரமே 'நான்' என்கிற மனோபாவனை இருக்கிறதோ அதுவரை அவனுக்கு இந்த 'சௌசம்' (தூய்மை) 'அசௌசம்' (தூய்மையில்லாமை) என்ற இந்த இரண்டும் உண்டு. இப்படிப்பட்ட பாவனை இல்லையென்றால் நாம் ஒரு விதத்தில் சுசி இல்லாவிட்டாலும் கூட, (ஆத்ம ஞானம் பெற்றிருப்பதனால்) வேறுவகையில் சுசி என்பதை நிரூபித்து விடலாம். ஆகவே இந்த சரீரத்தை வைத்துக் நாம் அடைய வேண்டியதை அடைந்து விட்டால் அதுதான் சிறந்தது. அதை விடுத்து அசுசியாய் இருக்கப்பட்ட இந்த உடலை, " நான் சுசியாக்கப் போகிறேன் " என்றால் அது முடியாத காரியம்.

அடுத்ததாக " அசுகம் " (இன்பமற்றது) என்று கூறப் பட்டுள்ளது.

(அதாவது இன்பமற்ற ஒன்றை இன்பம் தருவதாகக் கருதுவதும் மோஹத்தினாலேயே ஆகும்.)

உலகத்தில் எப்பொழுதும் பிரியமாக இருக்கப்பட்ட பொருள் உண்டா என்று கேட்டால், அதற்கு சங்கர பகவத் பாதாள் ஒரு சுலோகத்தில்

"யஸ்மாத்யாவத்ப்ரியம் ஸ்யாதிஹ ஹி விஷயதஸ்தா-
வதஸ்மின்-ப்ரியத்வம்
யாவத்து:கம் ச யஸ்மாத்பவதி கலு ததஸ்தாவதேவாப்ரி-
யத்வம் |
நைகஸ்மின்ஸர்வகாலேऽஸ்த்யுபயமபி கதாऽப்ய
ப்ரியோऽபி ப்ரிய ; ஸ்யாத்
ப்ரேயானப்யப்ரியோ வா ஸததமபி தத : ப்ரேய
ஆத்மாக்ய-வஸ்து ||"

(எதுவரை ஒருவன் ஒரு பொருளிலிருந்து இன்பமுறுகின்ருனே அதுவரை அப்பொருள் விருப்பமாக உள்ளது. எதுவரை அது துன்பம் தருமோ அதுவரை அப்பொருள் வெறுக்கத்தக்கதாயுள்ளது. ஒரே பொருள் எப்பொழுதும் விரும்பத்தக்கதாகவோ, வெறுக்கத்தக்கதாகவோ இருப்பதில்லை. சில சமயங்களில் வெறுக்கத் தகுந்த பொருள் விரும்பத்தக்கதாக மாறலாம். மேலும் எது விரும்ப ஏற்ற பொருளோ அது வெறுப்பிற்குரியதாகவும் ஆகலாம். ஆதலால் ஆத்மா என்னும் பொருள் எப்போதும் மிகவும் விரும்பத்தக்கதாக உள்ளது.)

என்று விளக்கியுள்ளார். ஒரு தந்தைக்குத் தன் பையன் மீது அன்பு உண்டு. ஆனுல் பையன் அப்பாவினுடைய சொற்படி நடக்கும் வரையில்தான் அவன்மேல் அப்பாவிற்குப் பிரியம். அவன் அவ்வாறு நடக்காவிட்டால் அவனைப் "போக்கிரி" என்றெல்லாம் அப்பா திட்டுவார். அப்பா தனக்காகப் பையனிடத்தில் அன்பு காட்டுகிருரே ஒழிய, அந்த அன்பு பையனுக்காக இல்லை. எதுவரை பையன் தன்னுடைய சொற்படி கேட்டுக் கொண்டு, பணம் சம்பாதித்து அதைத் தனக்கும் கொடுத்து வருகிருனே அது வரைதான் அப்பாவிற்கு அவன்மேல் பிரியம் இருக்கும் என்பதை நாம் உலகத்தில் பார்ப்போம்.

அதேபோல், எதுவரை துக்கம் இருக்கும் என்பதையும் நாம் பார்க்கவேண்டும். ஒருவனுக்குச் சர்க்கரை மிகவும் பிடித்த பண்டமாக இருக்கலாம். இன்னெருவனுக்கு அது பிடித்திருந்தாலும் கூட, சர்க்கரை வியாதி வந்துவிட்டால் அதை அவன் தொடவே மாட்டான். "இவ்வளவு நாட்கள் சர்க்கரை சாப்பிட்டுக் கொண்டிருந்தீர்களே, ஏன் இப்பொழுது மட்டும் சர்க்கரை சாப்பிடுவதில்லை? என்று கேட்டால், "இப்பொழுது எனக்கு வியாதி வந்திருக்கிறது அதனுல் நான் சர்க்கரையை சாப்பிட மாட்டேன்" என்று அவன் கூறுவான். மருந்து என்ற கசப்பான ஒரு பொருளை நாமெல்லாம் "வேண்டாம், வேண்டாம்" என்று சாதாரண சமயங்களில் ஒதுக்கித்

தள்ளிக் கொண்டிருப்போம். ஆனால் வியாதி வந்த காலத்தில், " முதலில் மருந்தைக் கொண்டு வாருங்கள் " என்று நாமே கேட்டு வாங்கி சாப்பிடுவோம். அப்போது நாம் முன்பு பிரியம் வைக்காத பொருளிலும் பிரியத்தைக் காட்டுவோம். ஆகவே ஒரே பொருள் எல்லா காலத்திலும் பிரியமாகவோ அப்ரிய மாகவோ இருப்பதில்லை.

ஆத்மா என்பதுதான் ஒருவனுக்கு எப்போதும் பிரியமான வஸ்து. ஆனால் மனிதன் தற்காலிகமாக சுகம் தரக்கூடிய விஷயங்களை, அவைதான் அவனுக்கு பிரியமானவை என்று நினைத்து அவைகளிலேயே ஆசை வைத்துக் கொண்டிருக் கிறான். ஆனால் ஒருவன் பிரியம் கொள்ளவேண்டிய முக்கிய மான விஷயம் ஆத்மா தான்.

இவ்வாறு ஒருவன் ஆசை வைக்கக் கூடாத பொருட்களி லெல்லாம் ஆசை வைத்தால் அதுவே அவனுக்கு ம்ருத்யு (யமன்) ஆகிவிடும். இதுதான் மோஹம் என்று ஸூத்திரத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இத்த ராகத்வேஷங்கள் ஆகிய இரண்டும் மிகவும் கெட்ட எதிரிகள். மோஹம் என்பது இருந்தால் இந்த ராகத்வேஷங்களும் இருக்கும். மோஹம் என்பது இல்லாவிட்டால் இந்த விருப்பு, வெறுப்பு என்பவை கிடையாது.

" தேஷாம் மோஹபாபீயான் "

(அவைகளில் மோஹம்தான் அதிக அபாயகரமானது)

என்று கூறியிருப்பதால் மோஹத்தை நாம் விட்டுவிட வேண்டும்.

சாஸ்திரம் வாசிக்கும் பொழுது, "மற்ற பொருட்களெல்லாம் மோஹம்" என்று ஒருவனுக்குத் தோன்றலாம். ஆனால் வாசித்த புத்தகத்தைக் கீழே வைத்தவுடன், " இன்னும்

கொஞ்சம் டானிக் சாப்பிட்டால் என்ன, நாம் புஷ்டியாக இருக்கலாமே '' என்று தோன்றும். '' ஏகம் விசோகம் பரம் '' என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து, ஆத்மாவிற்குச் சோகம் இல்லை என்பது தெரியும் இந்த ஆத்மா ஸுகஸ்வருபிதான் என்பதை ஸுஷுப்தியிலேயே நாம் நன்ருக அனுபவத்தின் மூலமாகப் பார்க்கலாம். ஆகவே நாம் ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தையும் ஆராய்ந்தாகி விட்டது. ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபத்தைப் பற்றியும் ஆராய்ந்தோம். நாம் இப்படிப் பார்த்தால் ப்ரஹ்மமும் ஸுக ஸ்வரூபியாக இருக்கிறது. ஆத்மாவும் ஸுக ஸ்வரூபியாக இருக்கிறது. ஆனுலும் ' ஏகம் விசோகம் பரம் ' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு மேலே எந்த ஒரு பொருளும் கிடையாது.

'' ப்ரத்யக் ப்ரஹ்ம ததஸ்மி யஸ்ய
க்ருபயா தம் தேசிகேந்த்ரம் பஜே ''

(எவருடைய க்ருபையினுல் உள்ளிருக்கும் ஆத்மாவான நான்தான் ப்ரஹ்மமாக இருக்கிறேஞே அந்த உயர்ந்த குருவைத் துதிக்கிறேன்.)

'ப்ரத்யக் ப்ரஹ்மா' என்று கூறப்பட்டிருப்பதால்

ப்ரத்யக பின்னம் ப்ரஹ்மா

(ஜீவனிலிருந்து ப்ரஹ்மம் வேறுபட்டதல்ல)

இந்த ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்ருய்த்தான் இருக்க வேண்டும்.

'' யதா ஹ்யேவைஷ ஏதஸ்மின்னுதரமந்தரம் குருதே ।
அத தஸ்ய பயம் பவதி ।

(அதற்குள் சற்றே வேற்றுமை செய்தாலும்
அதனுல் பயம் ஏற்படுகிறது)

என்று வேதம் உரைக்கிறது.

சிலர், " நாம் ஸகுணமாக (குணங்களுடன் கூடிய) இருக்கப் பட்ட ஈசுவரனை ஆராதித்து, அவனுடைய லோகத்திற்குச் சென்றால் பயமே இல்லாமல் இருக்கலாமே " என்று கூறுவர். ஆகவே அந்த லோகங்களில் (உலகங்களில்) இருந்தாலும்கூட

" த்விதீயாத் வை பயம் பவதி "

(இரண்டாவது பொருளிருந்தால் பயம் ஏற்படுகிறது)

என்று கூறப்பட்டிருக்கிறது. இரண்டாவது பொருள் என்று ஒன்று இருந்தால் அப்போது அவனுக்கு பயம்தான் ஏற்படும். இவ்வாறில்லாமல் ஒருவன் ப்ரஹ்ம விசாரம் செய்தால், ப்ரஹ்ம விசாரம் செய்து தன்னுடைய ஸ்வரூபத்தைத் தெரிந்து கொண்டால் அவன் ப்ரஹ்மமே ஆகிவிடுகிறான். அதனால்தான் " ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி " என்று கூறப்பட்டிருக்கிறது.

ஆகவே ஒருவன் தத்துவத்தை அறிவதினால் அவன் வேறு விதமாக நினைத்துக் கொண்டிருந்ததெல்லாம் விலகி அவன் ப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறான் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகவே நாம் சிறிதளவாவது வேதாந்த விசாரம் செய்து ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற முயன்றோமென்றால், அதிலே நாம் சிரத்தை வைத்துக் கொண்டால்,

" இத : கோன்வஸ்தி

மூடாத்மா யஸ்து ஸ்வார்தே ப்ரமாத்யதி "

(தன் (ஆத்ம) நலனிலேயே தவறுன பாவனை கொண்டிருப் பவனைவிட முட்டாளாக யாரேனும் இருக்க முடியுமா ?)

என்று பகவான் சொன்ன வகையில், ஒருவேளை இந்த ஜன் மாவில் நமக்கு மோக்ஷம் கிடைக்காவிட்டாலும் அந்த ஸம்ஸ்

காரங்களினுல் (வாஸனைகளினுல்) அடுத்த ஜன்மாவில் நமக்கு " ஆத்ம ஸாக்ஷாத்காரம் " கிடைக்கலாம் ஆகவே நாம் அதற் காக முயற்சி செய்ய வேண்டும்.

ஆகவே நாம் எந்த உயர்ந்த லோகத்திற்குச் சென்ருலும்

" க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி "

என்று சொன்னதுபோல் புண்ணியங்கள் தீர்ந்தவுடன் மனிதர் களின் உலகிற்குத்தான் செல்ல வேண்டிவரும். ஆகவே நாம் நிலையற்ற பொருட்களிலிருந்து விடுபட்டு நிலையான பொருளை அடைவதற்கு பகவான் சக்தி கொடுத்திருக்கிருன். இதற்கு மனிதப் பிறவி என்பது மிகவும் ஏற்றதாகும். நாம் மனிதப் பிறவியை வீணடிக்கக் கூடாது. இது சாஸ்திரங்களுடைய முடிவு. இந்த ஞானத்தை உங்களுக்கு பகவான் அளிக்கட்டும் என்று பிரார்த்தனை செய்து இந்த உபந்யாசத்தை முடிக்கிறேன்.

ஹர நம : பார்வதீ பதயே !

ஹர ஹர மஹாதேவ !!

ஜானகீ காந்த ஸ்மரணம் !

ஜய ஜய ராம ராம !!

